எட்டு மணிக்கெல்லாம் தொலைப்பேசி எக்ஸ்சேஞ் சோடு தொடர்புகொண்டு, தன் பகுதியில் முன் தினம் முடிக்காமல் தேங்கிய புகார்களோடு இன்றைய புதிய புகார்களையும் கேட்டு எழுதிக்கொண்டு, சந்தோஷமாய்ப் புறப்பட்டார். அவரிடம் நல்ல நிலையிலுள்ள இரண்டு டயல்கள் இருந்தன. பஜார் தெரு நாடார் பேரமே பேசமாட்டார்.

இந்நேரம் பரங்கி மலையடிவாரத்திலுள்ள மத்தியாஸ் நகர் சேரியில் அங்கம்மா நேற்றிரவு வந்து சேர்ந்த புதுச்சரக்கு நிரம்பிய பிளாஸ்டிக் கேனுடன் தண்டபாணியை எதிர்கொள்ளுவாள். ஏழெட்டு ரூபாயில் அன்றைய காலை நேரம் சூடாகவும் தெம்பாகவும் அவனுக்கு அமைந்து, நாளெல்லாம் சைக்கிள் மிதித்து மற்ற புகார்களையும் பழுதுகளையும் கவனித்து முடிக்க ஏதுவாயிருக்கும். வீட்டுக்குப் போகும்போது எப்படியும் ஓர் இருபத்தைந்து ரூபாயாவது 'மால்' சேர்ந்திருக்கும். எல்லாம் இன்று ஆகும் 'போணி'யைப் பொறுத்தது.

சரியாகப் போணியாகவில்லையென்றால் நாள் முழுவதுமே நாசமாகிவிடும் என்ற யோசனையோடு சைக்கிளை மிதித்தான் தண்டபாணி.

"வணக்கம் நாட்டார்ரே" என்றவாறே கடை முன்னால் இறங்கிய தண்டபாணியை வியப்போடு பார்த்து விட்டு, "என்னே..?" என்றார் சங்கரலிங்கம்.

"ஸ்டோர்ஸ் தொறக்கறதுக்கு நேரமாகவிட்டது. மாத்திப்பிடலாம்", என்றார் லைன்மேன்.

"அதான் மாத்தியாச்சேப்பா, பாரு புது டயலு, எப்பிடி ஓடுது பாரு" என்றார் மளிகைக் கடைக்காரர்.

தண்டபாணியும் அதை சோதித்துப் பார்த்தார். புத்தம் புதிய ஐடிஐ டயல். ஆச்சரியம், ஏமாற்றம், எரிச்சல் கோபமெல்லாம் ஒரு சேர, "யாரு வந்து மாத்தினது?", என்று கேட்டார் லைன்மேன்.

"ஒங்க ஜே.இ. சார் வந்தாரு, ஏழுரை மணிக்கெல்லாம் வந்து மாற்றி குடுத்துட்டுப் போ யிட்டாரு."

"என்ன நாடார், ஒனக்கோசரம் ஸ்டோர்ஸ்ல சொல்லி வச்சி வாங்கியாந்திருக்கேன். ஸ்டோர்காரனுக்கு இருபது ரூபா கொடுத்தேன். டயலுக்கு டிமாண்டு ஜாஸ்திங்க" என்றார் தண்டபாணி.

"அதுக்கு நா என்ன செய்யறது, வேறே ஆருக்காச்சி போட்டுக் குடுத்து காசு வாங்கின்னா. ஜே.இ. முந்திகிட்டாரு. ஒனக்கு குடுக்கறதத்தான் அவருக்கு குடுத்தேன்". சொல்லிவிட்டு உறவைக் கெடுத்துக்கொள்ள வேண்டாமென்று ஓர் இருபத்தைந்து ரூபாயை எடுத்து தண்டபாணியின் கையில் வைத்து அமுக்கினார் கடைக்காரர்.

தொலைப்பேசி வலைதளம் என்று அன்றைய முறையச் சொன்னால், அதன் பல்வேறு அங்கங்கள் உங்களுக்குப் பரிச்சயமான அளவில்.. வெளியில் தெரியும் கம்பங்கள், அவற்றின் வழியாக வாடிக்கையாளரின் வீட்டையடையும் நீண்ட தூரம் பயணித்த கம்பிகள், வாடிக்கையாளரின் வீட்டுக்குள் இருக்கும் கருவிகள் என்பன.

வாடிக்கையாளரின் தொலைப்பேசியுடன் இணைந்த பூமிக்கடியில் செலும் கேபிள்; இணைப்பகத்தில் அமைந்த சுவிட்சுகள்; டயல்டோன், பிஸிடோன் முதலான ஒலிகளை நமக்கு உண்டாக்கித்தரும் ரிங்கர் - இவை எல்லாம இயற்கை உபாதைகளி னின்று பாதுகாக்கப்படுவது முக்கியமான காரியம். ஒவ்வொரு வாடிக்கையாளரின் தொலைப்பேசி கருவியும் அப்பகுதியிலுள்ள டெலிபோன் எக்ஸ்சேஞ்சில் பொருத்தப்பட்ட சுவிட்சுகள் - செலக்டர்கள் முதலான விலையுயர்ந்த முக்கிய இயந்திரங்களால் ஆளப்படுபவை. அதைக் கருத்தில் கொண்டே டெபாசிட், வாடகை முதலான தொகை வசூலிக்கப்படுகிறது.

"ஐயோ, இந்த டெலிபோன் ஒண்ணுக்கா இவ்வளவு வாடகை? இது எங்கள் வீட்டுக்குள்ளதானே இருக்கு?" என்று பல அன்பர்கள் கேட்டதுண்டு. செலக்டர்கள், சுவிட்சுகள், ரிங்கர் ஆகிய விலையுயர்ந்த - அதிமுக்கிய டெலிஃபோன் எக்ஸ்சேஞ்சு இயந்திரங்கள் அதீத மின்சார பாய்ச்சலால் முற்றிலும் சேதமடையக் கூடும் என்பதால் அதை தடுக்க அங்கங்கே தடைகள் அமைக்கப்பட்டிருந்தன. எக்ஸ்சேஞ்சுக்குள் அதீத மின்சக்தி தாக்கினால் இயந்திரங்களைப் பாதுகாக்க ஃப்யூஸ், ஹீட்காயில், கார்பன் அரெஸ்டர்கள் என்பவை ஒவ்வொரு தொலைபேசிக்குமாய் பொருத்தப்பட்டு, இவை ஒவ்வொன்றாக செயலிழந்து முக்கிய இயந்திரங்கள் சேதமடைவதைத் தடுக்கும்.

இதே விதமாய் ஒரு காலக்கட்டத்தில் வாடிக்கையாளரின் வீட்டுக்குள்ளும் தொலைப்பேசி கருவிக்கு சற்று தூரத்தில் எல்.டி. பாக்ஸ் (Lightning Device Box) என்று ஒன்றிருந்தது. இடிமின்னல் மற்றும் மிக அதிகமான மின்சாரம் திடீரென வந்து தாக்கும்போது டெலிபோன் சாதனம் செத்து விடாதிருக்கும்படி இந்த ஏற்பாடு. நான் சென்னை தொலைபேசிக்குள் காலெடுத்து வைத்த நாளிலேயே அது பெரும்பான்மையான வீடுகளில் தென்படவில்லை.

எல்.டி. பெட்டியில், சிறிய கண்ணாடி ஃப்யூஸ் காரியர் ஒன்னும் சிறிய பச்சை நிற ஹீட்காய்ல் ஒன்றும் பொருத்தப்பட்டிருக்கும். இந்த பச்சை நிற ஹீட்காய்லோ, கண்ணாடி ஃப்யூஸோ அதிகபட்ச மின்சக்தி வருங்கால் துண்டிக்கப்படும். எனவே, தொலைப்பேசி கருவி சேதமடையாது. எக்ஸ்சேஞ்சில் இருந்த ஹீட்காய்ல்கள் சற்றே அளவில் பெரியதும் சிவப்பு நிறத்திலும் கருப்பு நிறத்திலுமானவை.

நான் 60களின் ஆரம்பத்தில் இலாகாவில் அடியெடுத்து வைத்த சமயம், அனேகமாய் வாடிக்கையாளர் வீடுகளில் இருந்த எல்.டி. பெட்டிகள் அகற்றப்பட்டிருந்தன.

(தொடரும்)

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116. Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094. Editor : PRABHU THILAAK**

